

உ

கடவுள் துணை.

# விக்கிரமசோழனுலா.

௧. சீர்தந்த தாமரையாள் கேள்வன் றிருவுருவக்
கார்தந்த வுந்திக் கமலத்துப்—பார்தந்த

௨. ஆதிக் கடவுட் டிசைமுகனு மாங்கவன்றன்
காதற் குலமைந்தன் காசிபனு—மேதக்க

௩. மையறு காட்சி மரீசியு மண்டிலஞ்
செய்ய தனியாழித் தேரோனு—மையல்கூர்

௪. சிந்தனை யாவிற்கு முற்றத் திருத்தேரின்
மைந்தனை யூர்ந்த மனுவோனும்—பைந்தடத்

௫. தாடு துறையி லடுபுலியும் புல்வாயுங்
கூடநீ ரூட்டிய கொற்றவனும்—நீடிய

௬. மாக விமானந் தனியூர்ந்த மன்னவனும்
போக புவிபுரந்த பூபதியும்—யாகத்துக்

௭. கூற வரிய மனுக்கொணர்ந்து கூற்றுக்குத்
தேற வழக்குரைத்த செம்பியனு—மாறழிந்

௮. தோடி மறலி யொளிப்ப முதுமக்கட்
சாடி வகுத்த தராபதியுங்—கூடார்தந்

௯. தூங்கு மெயிலெறிந்த சோழனு மேல்கடலில்
வீங்குநீர் கீழ்கடலில் விட்டோனு—மாங்குப்

௧௦. பிலமதனிற் புக்குத்தன் பேரொளியா னாகர்
குலமகளைக் கைப்பிடித்த கோவு—முலகறியக்

௧௧. காக்குஞ் சிறுபுறவுக் காகக் களிகூர்ந்து
தூக்குந் துலைபுக்க தூயோனு—மேக்குயரக்

---

௪. "மைந்தனையூர்ந்தமறவோனும்"—எனவும் **பிரதிபேதம்.**

௬. "பூபதியு—மாகத்து"—பி - ம்.

௧௨. கொள்ளுங் குடகக் குவடூ டறுத்திழியத்
தள்ளுந் திரைப்பொன்னி தந்தோனுந் — தெள்ளருவிச்

௧௩. சென்னிப் புலியே றிருத்திக் கிரிதிரித்துப்
பொன்னிக் கரைகண்ட பூபதியு — மின்னருளின்

௧௪. மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப்
பாதத் தளைவிட்ட பார்த்திவனு — மீதெலா

௧௫. மெண்கொண்ட தொண்ணூற்றின் மேலு மிருமூன்று
புண்கொண்ட வென்றிப் புரவலனுங் — கண்கொண்ட

௧௬. கோதிலாத் தேறல் குனிக்குந் திருமன்றங்
காதலாற் பொன்வேய்ந்த காவலனுந் — தூதற்காய்ப்

௧௭. பண்டு பகலொன்றி லீரொன் பதுசுரமுங்
கொண்டு மலைநாடு கொண்டோனுந் — தண்டேவிக்

௧௮. கங்கா நதியுங் கடாரமுங் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியனும் — வங்கத்தை

௧௯. முற்ற முரணடக்கி மும்முடிபோய்க் கல்யாணி
செற்ற தனியாண்மைச் சேவகனும் — பற்றலரை

௨௦. வெப்பத் தடுகளத்து வேழங்க ளாயிரமுங்
கொப்பத் தொருகளிற்றாற் கொண்டோனு — மப்பழநூல்

௨௧. பாடரவத் தென்னரங்க மேயாற்குப் பன்மணியா
லாடரவப் பாய லமைத்தோனுங் — கூடலார்

௨௨. சங்கமத்துக் கொள்ளுந் தனிப்பரணிக் கெண்ணிறந்த
துங்கமத யானை துணித்தோனு — மங்கவன்பின்

௨௩. காவல் புரிந்தவனி காத்தோனு மென்றிவர்கள்
பூவலய முற்றும் புரந்ததற்பின் — பேவலர்தஞ்

௨௪. சேலைத் துரந்து சிலையைத் தடிந்திருகாற்
சாலைக் களமறுத்த தண்டினான் — மேலைக்

௨௫. கடல்கொண்டு கொங்கணமுங் கன்னடமுங் கைக்கொண்
டடல்கொண்ட மாராட் டரசை — யுடலை

௨௬. யிறக்கி வடவரையே யெல்லையாத் தொல்லை
மறக்கலியுஞ் சுங்கமு மாற்றி — யறத்திகிரி

---

௧௮. "கைவாரக், கங்கா புரிபுரந்த கற்பகமும்"—எனவும் பி-ம்.
௨௫. "அடல்கொண் டமரா டரசை"—எனவும் பி-ம்.

௨௭. வாரித் திகிரி வலமாக வந்தளிக்கு
மாரிற் பொலிதோ ளபயற்குப் — பாரிளங்கத்

௨௮. தோன்றியகோன் விக்கிரம சோழன் றொடைத்தும்பை
மூன்று முரச முகின்முழங்க — நோன்றலைய

௨௯. மும்மைப் புவனம் புரக்க முடிகவித்துச்
செம்மைத் தனிக்கோ றிசையளப்பத் — தம்முள்

௩0. விடவுட் படுத்த விழுக்கவிகை யெட்டுக்
கடவுட் களிறு கவிப்பச் — சுடர்சேர்

௩௧. இணைத்தார் மகுட மிறக்கி யரசர்
துணைத்தா ளபிடேகஞ் சூட்டப் — பணைத்தேறு

௩௨. நீராழி யேழு நிலவாழி யேழுந்தன்
போராழி யொன்றாற் பொதுநீக்கிச் — சீராரு

௩௩. மேய திகிரி விரிமே கலைபல்குற்
றூய நிலமடந்தை தோள்களினுஞ் — சாயலி

௩௪. னேது முலகங்க ளேழுந் தனித்துடைய
கோதில் குலமங்கை கொங்கையினும் — போதில்

௩௫. நிறைகின்ற செல்வி நெடுங்கண் களிறு
முறைகின்ற நாளி லொருநா — ளுறைகழற்காற்

௩௬. றென்னர் திறையளந்த முத்திற் சிலபூண்டு
தென்னர் மலையாரச் சேறணிந்து — தென்னர்

௩௭. வரவிட்ட தென்ற லடிவருட வாட்கண்
பொரவிட்ட பேராயம் போற்ற — விரவிட்ட

௩௮. சித்திலப் பந்தர்க்கீழ் நீணிலாப் பாயன்மேற்
றொத்தலர் மாலைத் துணைத்தோளு — மைத்தடங்

௩௯. கண்ணு முலையும் பெரிய களியன்ன
மெண்ணு முலகங்க ளேழுடைய — பெண்ணணங்கு

௪0. பெய்த மலரோதிப் பெண்சக்ர வர்த்தியுட
னெய்திய பள்ளி யினிதெழுந்து — பொய்யாத

௪௧. பொன்னிப் புதுமஞ் சனமாடிப் பூசுரர்கைக்
கன்னித் தளிரறுகின் காப்பணிந்து — முன்னை

---

௨௯. "முடிசூடிச்" — பி-ம்.

௪௨. மறைக்கொழுந்தை வெள்ளி மலைக்கொழுந்தை மௌலிப்
பிறைக்கொழுந்தை வைத்த பிரானைக்—கறைக்களத்துச்

௪௩. செக்கர்ப் பனிவிசும்பைத் தெய்வத் தனிச்சுடரை
முக்கட் கனியை முடிவணங்கி—மிக்குயர்ந்த

௪௪. தானத் தொழின்முடித்துச் சாத்துந் தகைமையன
மானக் கலன்கள் வரவருளித்—தேன்மொய்த்துச்

௪௫. சூழு மலர்முகத்துச் சொன்மா மகளுடனே
தாழு மகரக் குழைதயங்க—வாழுந்

௪௬. தடமுலைப் பார்மடந்தை தன்னுடனே தோளிற்
சுடர்மணிக் கேயூரஞ் சூழப்—படருந்

௪௭. தணிப்பில் பெருங்கீர்த்தித் தைய லுடனே
மணிக்கடகங் கையில் வயங்கப்—பிணிப்பின்

௪௮. முயங்குந் திருவுடனே முந்நீர் கொடுத்த
வயங்கு மணிமார்பின் மல்க—வுயங்கா

௪௯. அருங்கொற்ற மார்க்கு மணங்கி னுடனே
மருங்கிற் றிருவுடைவாள் வாய்ப்பப்—பொருந்திய

௫௦. வண்ணற் படிவத் தரும்பே ரணியணிந்து
வண்ணத் தளவில் வனப்பமைத்துக்—கண்ணுதலோன்

௫௧. காமன் சிலைவணங்க வாங்கிய கட்டழகு
தாம முடிவணங்கத் தந்தனைய—காமருபூங்

௫௨. கோலத் தொடுபெயர்ந்து கோயிற் புறநின்று
காலத் ததிருங் கடாக்களிறு—ஞாலத்துத்

௫௩. தானே முழங்குவ தன்றித் தனக்கெதிர
வானே முழங்கினுமவ் வான்றடவி—வானிற்

௫௪. கணியு மருப்பு மடற்கையு மின்மை
தணியும் யமராச தண்டந்—தணியாப்

௫௫. பரிய பெருங்கோ டிணைத்துப் பணைத்தற்
குரிய தொருதானே யாகிக்—கரிய

௫௬. மலைக்கோ டிணைத்து மடித்திடியக் குத்துங்
கொலைக்கோட்டு வெங்கால் கோப—மலைத்தோட

௪௮. "முயங்கா"—பி-ம்.

ருஎ. வீறு மதந்தனதே யாக வுலகத்து
வேறு மதம்பொறா வேகத்தாற்—கூறொன்றத்

ருஅ. தாங்கிப் பொறையாற்றா தத்தம் பிடர்நின்றும்
வாங்கிப் பொதுநீக்கி மண்முழுது—மோங்கிய

ருகூ. கொற்றப் புயமிரண்டாற் கோமா னகளங்கன்
முற்றப் பரித்ததற்பின் முன்புதா—முற்ற

சாO. வருத்த மறமறந்து மாதிரத்து வேழம்
பருத்த கடாந்திறந்து பாயப்—பெருக்கத்

சாக. துவற்று மதுரச் சுவடுபிடித் தோடி
யவற்றி னபரங்கண் டாறி—யிவற்றை

சாஉ. அளித்தன னெங்கோமா னுதலா லின்று
களித்தன வென்றுவக்குங் காற்று—நெளித்திழிய

சாந. வேற்றுப் புலத்தை மிதித்துக் கொதித்தமரி
லேற்றுப் பொருமன்ன ரின்னுயிரைக்—கூற்றுக்

சாச. கருத்து மயிரா வதநின் றதனை
யிருத்தும் பிடிபடியா வேறித்—திருத்தக்க

சாரு. கொற்றக் கவிகை நிழற்றக் குளிர்திரட்டைக்
கற்றைக் கவரிகளின் காலசைப்ப—வொற்றை

சாசா. வலம்புரி யூத வளைக்குல மார்ப்பச்
சிலம்பு முரசஞ் சிலம்பப்—புலம்பெயர்ந்து

சாஎ. வாட்படை கொட்ப மறமன் னவர்நெருங்கக்
கோட்புலிக் கொற்றக் கொடியோங்கச்—சேட்புலத்துத்

சாஅ. தென்னரு மாளுவருஞ் சிங்களருந் தோற்றுதகை
மன்னருந் தோற்க மலைநாடு—முன்னாங்

சாகூ. குலையப் பொருதொருநாட் கொண்ட பரணி
மலையத் தருந்தொண்டை மானும்—பலர்முடிமே

எO. லார்க்குங் கழற்கா லனகன் றனதவையுட்
பார்க்குமதி மந்திர பாலகரிற்—போர்க்குத்

எக. தொடுக்குங் கமழ்தும்பை தூசிநெடுஞ் சூடிக்
கொடுத்த புகழ்முனையர் கோனு—முடுக்கரையுங்

சாஅ. "மலைநாட்டார்"—பி-ம்.

௭௨. கங்கரையு மாராட் டரையுங் கலிங்கரையுங்
கொங்கரையு மேனைக் குடகரையுந் — தங்கோன்

௭௩. முனியும் பொழுது முரிபுருவத் தோடு
குனியுஞ் சிலைச்சோழ கோனுஞ் — சனபதிதன்

௭௪. றோளுங் கவசமுஞ் சுற்றமுங் கொற்றப்போர்
வாளும் புலியு மதியமைச்சு — நாளுமா

௭௫. மஞ்சைக் கிழித்து வளரும் பெரும்புரிசைக்
கஞ்சத் திருமறையோன் கண்ணனும் — வெஞ்சமத்துப்

௭௬. புல்லாத மன்னர் புலானுடம்பைப் பேய்வாங்க
வொல்லாத கூற்ற முயிர்வாங்கப் — புல்லார்தந்

௭௭. தாங்கு மடமகளிர் தத்தங் குழைவாங்க
வாங்கும் வரிசிலைக்கை வாணனும் — வேங்கையினுங்

௭௮. கூடார் விழிஞத்துங் கொல்லத்துங் கொங்கத்து
மோடா விரட்டத்து மொட்டத்து — நாடா

௭௯. தடியெடுத்து வெவ்வே றரசிரிய வீரக்
கொடியெடுத்த காலிங்கர் கோனுங் — கடியரணச்

௮௦. செம்பொற் பதணச் செறியிஞ்சிச் செஞ்சியர்கோன்
கம்பக் களியானைக் காடவனும் — வெம்பிக்

௮௧. கலக்கிய வஞ்சக் கலியதனைப் பாரில்
விலக்கிய வேணாடர் வேந்துந் — தலைத்தருமம்

௮௨. வாரிக் குமரிமுதன் மந்தா கினியளவும்
பாரித் தவனனந்த பாலனும் — பேரமரின்

௮௩. முட்டிப் பொருநகார் வடமண்ணை மும்மதிலு
மட்டித்த மால்யானை வத்தவனு — மட்டடயெழக்

௮௪. காதிக் கருநாடர் கட்டரணங் கட்டழித்த
சேதித் திருநாடர் சேவகனும் — பூகலத்து

௮௫. முட்டிய தெவ்வர் சடைகட்ட மொய்கழல்
கட்டிய காரானை காவலனு — மொட்டிய

௮௬. மான வரச ரிரிய வடகலிங்கத்
தானை துணித்த தவதிகனு — மீனவர்தங்

---

௭௫. "பொழிற்புரிசை" — பி-ம்.
௮௪. "காதித்திருநாடர்" — பி-ம்.

அஎ. கோட்டாறுங் கொல்லமுங் கொண்ட குடைநுளம்பன்
வாட்டார் மதயானை வல்லவனு—மோட்டரணக்

அஅ. கொங்கைக் குலைத்துக் குடகக் குவடொடித்த
செங்கைக் களிற்றுத் திகத்தனு—மங்கத்து

அகூ. வல்லவனுங் கோசலனு மாகதனு மாளுவனும்
வில்லவனுங் கேரளனு மீனவனும்—பல்லவனு

கூ0. மென்னும் பெரும்போ ரிகல்வேந்தர் மண்டலிகர்
முன்னு மிருமருங்கு மொய்த்தீண்டப்—பன்மணிச்

கூக. சோதி வயிர மடர்க்குஞ் சுடர்க்குழையார்
வீதி குறுகுதலு மேலொருநாண்—மாதவத்தோன்

கூஉ. சார்ந்த பொழுதனங்கன் றன்னை யறிவித்த
பூந்துவரை யந்தப் புரம்போன்று—மேந்திப்

கூங. பரக்குங் கலையல்குற் பாவையரே யானை
புரக்குந் திருநாடு போன்றும்—வரக்கருதா

கூச. ஏனை முனிக்குறும்பு கொல்ல விகன்மாறன்
சேனை திரண்ட திரள்போன்றுங்—கானலங்

கூரு. கண்டன் மணற்குன்றத் தன்னக் கணம்போன்றுங்
கொண்டலின் மின்னுக் குழாம்போன்று—மண்டு

கூசு. திரைதோறுந் தோன்றுந் திருக்குழாம் போன்று
வரைதோறுஞ் சேர்மயில்கள் போன்றும்—விரவினராய்

கூஎ. இந்து நுதல்வெயர்ப்ப வெங்கணுங் கண்பரப்பிச்
சிந்தை பரப்பித் தெருவெங்கும்—வந்தீண்டி

கூஅ. உத்தி சுடர வொளிமணிச் சூட்டெறிப்பப்
பத்தி வயிரம் பரந்தெறிப்ப—முத்தி

கூகூ. னிணங்கு மமுத கலசங்க ளேந்தி
வணங்கு தலையினராய் வந்து—கணங்கொண்டு

க00 பார்க்குங் கொடுநோக்கு நஞ்சுறைப்பக் கிஞ்சுகவாய்
கூர்க்கு மெயிறுவெறுங் கோளிழைப்ப—வேர்க்க

க0க. வரைகொ ணெடுமாடக் கீணிலையின் மல்கி
யுரக வரமகளி ரொப்பார்—விரல்கவரும்

---

க00. "பெறுங்கோளிழைப்ப"—பி-ம்.

க0உ. வீணையும் யாழுங் குழலும் விசிமுழவும்
பாணி பெயர்ப்பப் பதம்பெயர்த்துச்—சேணுயர்

க0௩. மஞ்சிவரும் வெண்பளிக்கு மாடத் திடைநிலையின்
விஞ்சையர் மாத ரெனமிடைவா—ரஞ்சனக்

க0ச. கண்ணிற் சிறிது மிமையாத காட்சியு
மண்ணிற் பொருந்தா மலரடியுந்—தண்ணென்ற

க0ரு. வாடா நறுஞ்செவ்வி மாலையுங் கொண்டழகு
வீடா நிலாமுற்ற மேனிலையிற்—கூடி

க0சா. புருவி னொளியி னுணர்வி னுரையிற்
பொருவி லரமகளிர் போல்வார்—அருகணைந்து

க0எ. சீரள வில்லாத் திருத்தோ ளயன்படைத்த
பாரள வல்ல பணைப்பென்பார்—பாருமின்

க0அ. செய்ய வொருதிருவே யாளுஞ் சிறுமைத்தோ
வைய முடையபிரான் மார்பென்பார்—கையிரண்டே

க0கூ. ஆனபோ தந்த முருகவே ளல்லனிவன்
வேனில்வேள் கண்டீ ரெனமெலிவார்—யானென்னு

கக0. மெண்ணுக் கிசைய வருமே யிவனென்பார்
கண்ணிற் கருணைக் கடலென்பார்—மண்ணளிக்கும்

ககக. ஆதி மனுகுலமிவ் வண்ணலான் மேம்படுகை
பாதியே யன்றூ லெனப்பகர்வார்—தாதெடுத்த

ககஉ. கொங்கை பசப்பார்தங் கோல்வளை காப்பார்போற்
செங்கை குவிப்பார் சிலர்செறிய—அங்கொருத்தி

## பேதை.

கக௩. வந்து பிறந்து வளரு மிளந்திங்கட்
கொந்து முகிழாக் கொழுங்கொழுந்து—பைந்தழைத்

ககச. தோகை கொடாமஞ்ஞை சூடுண்டு தோற்றவன்மேல்
வாகை புனைய வளர்கரும்பு—கோகிலத்தின்

ககரு. பிள்ளை யிளவன்னப் பேடை பிறந்தணிய
கிள்ளை பவளங் கிளைத்தகிளை—கள்ளங்

---

க0உ. "பதம்பெயர்த்து—நீணிலா"—பி-ம்.
ககச. "தோகைதொடாமஞ்ஞை"—பி-ம்.

௧௧௬. தெரியாப் பெருங்கட் சிறுதேறல் தாயர்
பிரியாப் பருவத்துப் பேதை—பரிவோடு

௧௧௭. பாவையு மானு மயிலும் பசுங்கிளியும்
பூவையு மன்னமும் பின்போதக்—காவலன்

௧௧௮. பொன்னிப் புகார்முத்தி னம்மனையுந் தென்னாகை
நன்னித் திலத்தி னகைக்கழங்குஞ்—சென்னிதன்

௧௧௯. கொற்கைக் குளிர்முத்தின் கோலமணி வல்சியுங்
கற்கைக்கு வேண்டுவன கைப்பற்றிப்—பொற்கொடியார்

௧௨௦. வீதி புகுந்து விளையாடு மெல்லைக்கண்
ஆதி யுகம்வந் தடிக்கொள்ள—மேதினிமே

௧௨௧. லூன்று கலிகடிந்த வுத்துங்க துங்கன்றன்
மூன்று முரச முழங்குதலும்—வான்றுணைத்

௧௨௨. தாயர் வரவந்து தாயர் தொழத்தொழுது
தாயர் மொழிந்தனவே தான்மொழிந்தாள்—சேயோன்

௧௨௩. படியின் மதியும் பகலவனுந் தோற்கு
முடியி லொருகாலு மூளா—வடிவின்

௧௨௪. மகிழ்ந்து மலரான் மலர்க்கண்ணு நெஞ்சு
நெகிழ்ந்த திருநோக்கி னேரா—முகிழ்ந்து

௧௨௫. சிரிக்குந் திருப்பவளச் செய்யொளியூ டாடா
விரிக்குந் திருநிலவின் வீழா—பரிக்கும்

௧௨௬. உலகம் பரவுந் திருப்புருவத் தோடா
திலக முகாம்புயத்திற் சேரா—பலவுந்

௧௨௭. திசையை நெருக்குந் திருத்தோளிற் செல்லா
விசையுந் திருமார்பத் தெய்தா—வசையிலாக்

௧௨௮. கைம்மலரிற் போகா வடிமலரிற் கண்ணுறா
மெய்ம்மலர்ப் பேரொளியின் மீதூரா—வம்மகள்

௧௨௯. கண்ணு மனமுங் கழுநீர்க் குலமுழுது
நண்ணுந் தொடையன்மே னாட்செய்ய—வுண்ணெகிழா

---

௧௧௭. "மானும் பயிலும்"—பி - ம்.

௧௧௯. "முத்த வல்சியுஞ் சோறடவு" எனவும் "பொற்றொடியார்" எனவும் பி - ம்.

௧௨௧. "உத்துங்கசோழன்"—பி - ம்.

௧௩௦. வம்பின்க ளன்னைமீர் மாலை யிதுவாங்கித்
தம்பின்க ளென்றுரைப்பத் தாயரு—மம்மே

௧௩௧. பெருமானை யஞ்சாதே பெண்ணமுதே யாமே
திருமாலை தாவென்று செல்வேங்—திருமாலை

௧௩௨. யாங்கொள்ளும் வண்ண மெளிதோ வரிதென்னத்
தேங்கொள்ளு மின்சொற் சிறியாளு—மாங்குத்தன்

௧௩௩. மார்பத்துக் கண்ணினீர் வாரப் பிறர்கொள்ளு
மார்வத்துக் கின்றே யடியிட்டாள்—சேர

௧௩௪. விருத்தி மணற்சோ றிளையோரை யூட்டு
மருத்தி நடுவே யயர்த்தாள்—ஒருத்தி

## பெதும்பை.

௧௩௫. மழலை தனது கிளிக்களித்து வாய்த்த
குழலி னிசைகவர்ந்து கொண்டாள்—நிழல்விரவு

௧௩௬. முன்னர் நகைதனது முல்லை கொளமுத்தின்
பின்னர் நகைகொண்ட பெற்றியாள்—கன்னி

௧௩௭. மடநோக்கந் தான்வளர்த்த மானுக்கு விட்டு
விடநோக்க வேலிரண்டு கொண்டாள்—சுடர்நோக்குந்

௧௩௮. தானுடைய மெய்ந்நுடக்கந் தன்மா தவிக்களித்து
வானுடைய மின்னுடக்கம் வாங்கினாள்—பூநறும்

௧௩௯. பாவைதன் பைங்குர வேந்தப் பசுங்கிளியும்
பூவையு மேந்தும் பொலிவினாள்—மேவு

௧௪௦. மடநடை யன்னப் பெடைபெறக் கன்னிப்
பிடிநடை பெற்றுப் பெயர்வாள்—சுடர்கனகக்

௧௪௧. கொத்துக் குயின்ற கொடிப்பவள பந்தத்தின்
முத்துப் பொதியுச்சி முச்சியா—ளெத்திறத்தும்

௧௪௨. வீரவேள் போல்வாரை வீட்டி விழுத்தவர்மேன்
மாரவேள் கண்சிவப்ப வாய்சிவப்பாள்—நேரொத்த

---

௧௩௪. "இளையோரை யூட்டி யருத்தி யறவே"—பி - ம்.

௧௩௫. "கொள்வாள்"—பி - ம்.

௧௩௮. "பூநாறும்"—பி - ம்.

கசங. கோங்க முகையனைய கொங்கையா டன்கழுத்தாற்
பூங்கமுகை யிப்போது பொற்பழிப்பாள்—பாங்கியருந்

கசச. தாயரும் போற்றமே தானே துயிலெழுந்து
பாயல் புடைபெயர்ந்து பையச்சென்—றியாயே

கசரு. தளரு மிடையொதுங்கத் தாழுங் குழைத்தாய்
வளரு மொருகுமரி வல்லி—கிளருங்

கசசா. கொழுந்து மளவிறந்த கொந்துங் கவினி
யெழுந்து கிளைகலிப்ப வேறித்—தொழுந்தகைய

கசஎ. கொங்குடைய பொன்னடருஞ் சென்னிக் கொழுங்கோங்கின்
பங்குடைய மூரிப் பணையணைந்—தங்குடைய

கசஅ. வண்டு முரல மணநாற வைகுவது
கண்டு மகிழ்ந்தேன் கனவிலெனக்—கொண்டு

கசகூ. வருக வருக மடக்கிள்ளை முத்தந்
தருக தருகவெனத் தாயர்—பெருக

கருo. விரும்பினர் புல்லி விரைய முலைவந்
தரும்பின வாகத் தணங்கே—பெரும்புயங்கள்

கருக. புல்லி விடாத புதுவதுவை சென்னியுடன்
வல்லி பெறுதி யெனவழுத்து—மெல்லை

கருஉ. யரச னபய னகளங்க னெங்கோன்
புரசை மதவரைமேற் போத—முரசந்

கருங. தழங்கு மறுகிற் றமரோடு மோடி
முழங்கு முகின்மாட முன்றிற்—கொழுங்கயற்கட்

கருச. பொன்னென வெல்லா மழகும் புனைவதொரு
மின்னென வந்து வெளிப்பட்டு—மன்னருயி

கருரு. ருண்டாற் றியவேங்கை வைக்க வொருதிருக்கைச்
செண்டாற் கிரிதிரித்த சேவகனைத்—தண்டாத

கருசா. வேகங் கெடக்கலிவாய் வீழ்ந்தாற்றும் பார்மகளைச்
சோகங் கெடுத்தணைத்த தோளானை—யாகத்துக்

---

கசசா. "கிளைகலிப்பவேறி"—பி - ம்.

கசகூ. "தாயர்—விரவி"—பி - ம்.

கருசா. "சோகங்கெடுத்தெடுத்த"—பி - ம்.

கருஎ. கொங்கை பிரியாத வீறோடுங் கோகனக
மங்கை பிரியாத மார்பானை—யங்கமலக்

கருஅ. கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலைத்—தையலுங்

கருகூ. கண்டகண் வாங்காள் தொழுமுகிழ்த்த கைவிடாள்
மண்டு மனமீட்கு மாறறியாள்—பண்டறியாக்

க௬0. காமங் கலக்கக் கலங்கிக் குழல்சரியத்
தாமஞ் சரியத் தனிநின்றாள்—நாமவேற்

க௬க. சேரனு மீனவனுஞ் சேவிப்பச் செம்பியரில்
வீரனு மவ்வெல்லை விட்டகன்றான்—மாரனுந்

க௬உ. தக்குத் தகாதானை யெய்து தரைப்படுத்துப்
புக்குத் தொடைமடக்கிப் போயினான்—மைக்குழல்

## மங்கை.

க௬௩. மங்கைப் பருவத் தொருத்தி மலர்பொதுளுங்
கங்கைப் புளினக் களியன்ன—மெங்கோனை

க௬௪. மன்னனை மன்னர் பிரானை வரோதயனைத்
தென்னனை வானவனைச் செம்பியனை—முன்னொருநாட்

க௬ரு. கண்ட பெதும்பைப் பருவத்தே தன்கருத்தாற்
கொண்ட பரிவு கடைக்கூட்டப்—புண்டரிகச்

க௬௬. செய்ய வடிமுதலாச் செம்பொன் முடியளவு
மைய லகல மனத்திழைத்துக்—கையினாற்

க௬எ. றீட்டுங் கிழியிற் பகற்கண் டிரவெல்லாங்
காட்டுங் கனவு தரக்கண்டு—நாட்டங்கொண்

க௬அ. டியாதொன்றுங் காணா திருப்பாள் பொருகளிற்றுத்
தாதொன்றுந் தொங்கற் சயதுங்கன்—வீதி

க௬கூ. வருகின்றா னென்று மணியணிகள் யாவுந்
தருகென்றாள் வாங்கித் தரித்தாள்—விரிகோதை

கஎ0. சூடினாள் பைம்பொற் றுகிலுடுத்தாள் சந்தனச்சே
றாடினா டன்பே ரணியணிந்தாள்—சேடியர்

கஎக. காட்டும் படிமக் கலத்துக் கமலத்தை
யோட்டும் வதனத் தொளிமலர்ந்து—கேட்டு

கஎ௨. விடைபோ மனங்கள்போல் வேல்விழிக டாமும்
படைபோய் வருவனபோற் பக்கங்—கடைபோய்

கஎ௩. மறித்து மதர்மதர்த்து வார்கடிப்பு வீக்கி
யெறிக்குங் குழைக்காதிற் கேற்று—நெறிக்கு

கஎ௪. மளக முதலாக வைம்பாற் படுத்த
வளர்கருங் கூந்தன் மலிந்துங்—கிளர

கஎ௫. வரியன நித்திலத்தி னம்பொற் றொடித்தோள்
பரியன காம்பிற் பணைத்துந்—தெரியற்

கஎ௬. சுவடு படுகளபத் தொய்யில்சூழ் கொங்கைக்
குவடு படவெழுச்சி கொண்டுந்—திவடர

கஎஎ. மூந்துங் கலையல்குன் மூரித் தடமகன்று
நொந்து மருங்கு லுடங்கியும்—வந்து

கஎ௮. மிடையும் புதுவனப்பு விண்ணோரும் வீழ
வடையுந் தனதுருக்கண் டஞ்சிக்—கொடையனகன்

கஎ௯. பண்டறியு முன்னைப் பருவத் துருவத்துக்
கண்டறியு மவ்வடிவு காண்கிலேன்—பண்டறியு

க௮0. முன்னை வடிவு மிழந்தேன் முகநோக்கி
யென்னை யறிகலன்யா னென்செய்கேன்—றன்னை

க௮க. வணங்கி வருவ தறிவ னெனவந்
திணங்கு மகளி ரிடைநின்—றணங்கு

க௮௨. மிறைவ னகளங்க னெங்கோன் குமரித்
துறைவ னிருபகுல துங்கன்—முறைமையாற்

க௮௩. காக்குங் கடல்கடைந்த கைமலரு முந்திமலர்
பூக்கு முலகளந்த பொற்கழலு—நோக்குந்

க௮௪. திருக்கொள்ளு மார்பமுந் தெவ்வேந்த ரெல்லாம்
வெருக்கொள்ளு மூரித்தோள் வெற்பு—முருக்கு

க௮௫. மகரக் குழைக்காது மாதரார் மாமை
நுகரப் புடைபெயரு நோக்குந்—துகிரொளியை

க௮௬. வௌவிய கோல மணிவாய மெப்பொழுதுஞ்
செவ்வி யழியாத் திருமுகமு—மெவ்வுருவு

---

கஎ௪. "மலிந்து—மிளிர"—பி - ம்.

கஅஎ. மாறு படாவண்ண மண்ணல் படிவத்து
வேறு படுவனப்பு மெய்விரும்பித்—தேறும்

கஅஅ. பிறையாம் பருவத்துப் பேருவகை யாம்பல்
நிறையா மதிக்கு நெகிழ்ந்தாங்—கிறைவனைக்

கஅகூ. கண்டு மனமுழு முயிருங் களிப்பளவிற்
கொண்டு பெயர்ந்தது கொல்யானை—பண்டு

ககூ0. நனவு கிழியிற் பகற்கண்டு நல்ல
கனவு தரவிரவிற் கண்டு—மனமகிழ்வாள்

ககூக. தீட்ட முடியாத செவ்வி குறிக்கொள்ளும்
வாட்ட முறங்கா மையுநல்க—மீட்டுப்

ககூஉ. பெயர்ந்தா டமர்தம் பெருந்தோள் களில்வீழ்ந்
தயர்ந்தா ளவணிலையீ தப்பாற்—சயந்தொலைய

## மடந்தை.

ககூ௩. வெந்து வடிவிழந்த காமன் விழிச்சிவப்பு
வந்து திரண்டனைய வாயினா—ளந்தமி

ககூச. லோலக் கடலேழு மொன்று யுலகொடுக்குங்
காலக் கடலனைய கட்கடையாள்—ஞாலத்தை

ககூரு. வீட்டி வினைமுடிக்க வெங்கால தூதுவர்கள்
கோட்டி யிருக்குங் குவிமுலையாள்—நாட்ட

ககூசு. வடிவின் மருங்குலாண் மாரனைப்போன் மேலோர்
முடிவி லுணர்வை முடிப்பாள்—கடிதோடிப்

ககூஎ. போகா தொழியா திடையென்று போய்முடிய
லாகாமை கைவளரு மல்குலாள்—பாகாய

ககூஅ. சொல்லி யொருமடந்தை தோழியைத் தோள்வருந்தப்
புல்லி நிலாமுற்றம் போயேறி—வல்லிநாஞ்

ககூகூ. சேடிய ரொப்ப வகுத்துத் திரள்பந்து
கோடியர் கண்டிருப்பக் கொண்டாடி—யாடினு

உ00. லென்மாலை நீகொள்வ தியாங்கொள்வ தெங்கோமான்
றன்மாலை வாங்கித் தருகென்று—மின்னனையாள்

---

ககூகூ. "கண்வெப்பக்கொண்டாடி"—பி - ம்.

உ0க. வட்டித் தளகமுங் கொங்கையும் வார்தயங்கக்
கட்டிக் கனபந்து கைப்பற்றி—யொட்டிப்

உ0உ. பொருதிறத்துச் சேடியர்தம் போர்தொலையத் தானே
யிருதிறத்துக் கந்துகமு மேந்திப்—பெரிது

உ0௩. மழுந்துறு தானத் தவைதன்னைச் சூழ
விழுந்து மெழுந்து மிடைய—வெழுந்துவரி

உ0௪. சிந்த விசிறு திரையி னுரையூடு
வந்த வனச மகளேய்ப்ப—முந்திய

உ0௫. செங்காந்த ளங்கை சிவக்குஞ் சிவக்குமென்
றங்காந்து தோள்வளைக ளார்ப்பெடுப்பத்—தங்க

உ0௬. ளுடங்கு கொடிமருங்கு னொந்தசைந்த தென்றென்
றடங்கு கலாப மரற்றத்—தொடங்கி

உ0௭. யரிந்த குரலினவா யஞ்சி றடிக்குப்
பரிந்து சிலம்பு பதைப்ப—விரிந்தெழுந்

உ0௮. கைக்கோ விடைக்கோ கமல மலரடிக்கோ
மைக்கோல வோதியின்மேல் வண்டிரங்க—வக்கோதை

உ0௯. பந்தாடி வென்று பருதி யகளங்கன்
சந்தாடு தோண்மாலை தாவென்று—பைந்துகிற்

உக0. றானை பிடித்தலைக்கும் போதிற் றனிக்குடைக்கீழ்
யானைமேல் வெண்சா மரையிரட்டச்—சேனை

உகக. மிடையப் பவளமு நித்திலமு மின்ன
வடையப் பணிலங்க ளார்ப்பப்—புடைபெயர

உகஉ. வார்ந்து மகர வயமீன் குலமுழுதும்
போந்து மறுகு புடைபிறழச்—சேர்ந்து

உக௩. பதலை முழங்கப் பகடேற்றி விட்ட
மதலைகண் முன்னர் மலிய—விதலையராய்த்

உக௪. தாழுந் தொழிலிற் கிளைபுரக்கத் தண்டடைந்து
வாழும் பரதர் மருங்கீண்ட—வீழுந்திக்

உக௫. கன்னியு நன்மதையுங் கங்கையுஞ் சிந்துவும்
பொன்னியுந் தோயப் புகார்விளங்க—மன்னிய

---

உ0௩. "மெழுந்து தாளத் திவைதன்னைச்"—பி - ம்.
உக௪. "தன்னடைந்து வாழும்"—பி - ம்.

௨௧௬. செங்கோற் றியாக சமுத்திர னண்ணுதலுந்
தங்கோ மறுகிற் றலைப்பட்டுத்—தங்களி

௨௧௭. லொட்டிய வொட்ட முணராதே தோள்வளையுங்
கட்டிய மேகலையுங் காவாதே—கிட்டித்

௨௧௮. தொழுதா ளயர்ந்தா டுளங்கினாள் சோர்ந்தா
ளழுதா ளொருதமிய ளானாள்—பழுதிலாக்

௨௧௯. காக்குந் துகிலு மிலங்கு பொலன்கலையும்
போக்கு நிதம்பம் புனைகென்று—வீக்கு

௨௨0. மணிக்கச்சுந் தம்முடைய வான்றூசுங் கொங்கை
பணிக்கக் கடைக்கண்கள் பாரா—வணிக்கமைந்த

௨௨௧. குன்றாத நித்திலக் கோவையும் பொன்னிறத்த
பொன்றாத பட்டும் புனைகென்று—நின்று

௨௨௨. கொடுத்தன கொங்கைகளுங் கொண்டன தானு
மடுத்தனர் தோண்மே லயர்ந்தாள்—கடுத்துக்

௨௨௩. கவரு மனங்களுடன் கைகலந்த தன்றித்
தவரு முதுகிளவித் தாய—ரவரெங்கும்

௨௨௪. கூசினார் சந்திற் பனிநீர் குழைத்திழைத்துப்
பூசினா ராலி பொழிந்தொழிந்தார்—வீசினா

௨௨௫. ரிட்டார் நிலவி லிளந்தென் றலுங்கொணர்ந்து
சுட்டார் குளிரி தொடுத்தெடுத்தார்—விட்டாரோ

௨௨௬. பள்ள மதனிற் படரும் பெரும்புனல்போ
லுள்ள முயிரை யுடன்கொண்டு—வள்ளல்பின்

௨௨௭. னோதை மறுகி லுடன்போன போக்காலிப்
பேதை நடுவே பிழைத்தொழிந்தாள்—மாதரில்

## அரிவை.

௨௨௮. வாரி படுமமுத மொப்பாண் மதுகரஞ்சூழ்
வேரி கமழ்கோதை வேறொருத்தி—மூரித்தேர்த்

௨௨௯. தட்டுஞ் சிறுகப் பெருகு மரகதத்திற்
கட்டுங் கனபொற் கலாபாரம்—பட்டுங்

---

௨௨௨. "அடுத்தன தோண்மேல்"—பி - ம்.

உரு0. துகிலுங் கரப்பச் சுடர்பரப்பி மேகபோ
யகல்கின்ற வல்கு லரிவை—யிகலி

உருக. யொருக்கி மருங்குகடிந் தொன்றிணைவந் தொன்று
நெருக்கிய மாமை நிரம்பித்—தருக்கி

உருஉ. யிடங்கொண்டு மின்னுக் கொடியொன் றிரண்டு
குடங்கொண்டு நின்றதெனக் கூறத்—தடங்கொண்

உருரு. டிணைத்துத் ததும்பி யிளையோர்க ணெஞ்சம்
பிணைத்துத் தடமுகட்டிற் பெய்து—பணைத்துப்

உருச. பெருமை புவமை பிறங்கொலிநீர் ஞாலத்
தருமை படைத்ததனைத் தன்னங்—கருமை

உருரு. யெறித்துக் கடைபோ யிருபுடையு மெல்லை
குறித்துக் குழையளவுங் கொண்டு—மறித்து

உருசு. மதர்த்து வரிபரந்து மைந்தர் மனங்கள்
பதைத்து விழநிறத்திற் பட்டுத்—ததைத்துக்

உருஎ. கழுநீ ரிதழின் கவினழித்து மானின்
விழிநீர்மை வாய்த்த விழியாள்—முழுது

உருஅ. நெறிந்து கடைகுழன்று நெய்த்திருண்டு நீண்டு
செறிந்து பெருமுருகு தேக்கி—நறுந்துணர்

உருகூ. வார்ந்து கொழுந்தெழுந்த வல்லியாய் மாந்தளிர்
சோர்ந்து மிசையசைந்த சோலையாய்ச்—சேர்ந்து

உச0. திருவிருந்த தாமரையாய்ச் சென்றடைந்த வண்டின்
பெருவிருந்து பேணுங் குழலாள்—பொருகளிற்றின்

உசக. வந்து மறுகி லொருநாண் மனுகுலத்தோன்
றந்த பெரிய தனிமைக்கட்—செந்தமிழ்க்

உசஉ. கோனே கவர்ந்தெம்மைக் கொண்டனன் வந்தெமக்குத்
தானே தரிற்றருக வென்பனபோற்—பூணே

உசரு. ரிணைக்கையுந் தோளு மிடுதொடிக ளேந்தா
துணைக்கண் டுயிற்றத் துயிலா—மணக்கூந்தல்

உசச. போது மறந்தும் புனையா பொலங்கச்சு
மீது படத்தரியா வெம்முலைகள்—சோதி

உசரு. யடுக்குங் கனபொற் றுகில்பேணா தல்குல்
கொடுக்குந் தெருணெஞ்சு கொள்ளா—தெடுக்குந்

௨௪௬. கருப்புச் சிலையனங்கன் கையம்பால் வீழ
நெருப்புக் குருகி நிறைபோ—யிருப்புழிப்

௨௪௭. பாடிய பூவைக்கும் யாதும் பரிவின்றி
யோடிய தோகைக்கு மன்பின்றிக்—கூடிய

௨௪௮. கிள்ளைக்குந் தம்மிற் கிளரு மிளவன்னப்
பிள்ளைக்கு மாற்றாள் பெயர்ந்துபோய்க்—கொள்ளை

௨௪௯. பயக்கு மலர்க்குரவப் பந்தர்ப் படப்பை
நயக்கு மிளமரக்கா நண்ணி—வயக்களிற்று

௨௫0. மன்னன் குலப்பொன்னி வைகலு மாடுதிரா
லன்னங்கா ணீரென் றழிவுற்றாள்—சென்னி

௨௫௧. பெருகும் புகாரடையப் பெற்றீரான் மற்றைக்
குருகுகா ளென்று குழைந்துங்—கருகிய

௨௫௨. நீலக் குயிலினங்கா ணீர்போலுஞ் சோணாட்டுச்
சோலைப் பயில்வீ ரெனத்துவண்டும்—பீலிய

௨௫௩. பேரியன் மஞ்ஞை பெறுதிராற் கொல்லியு
நேரியுஞ் சேர்வீ ரெனநெகிழ்ந்து—நேரியன்

௨௫௪. தண்டுழாய் மாலை பலகாலுந் தைவந்து
வண்டுகாள் வாழ்வீ ரெனமருண்டுந்—தொண்டிக்கோன்

௨௫௫. மன்றன் மலையத்து வாளருவி தோய்ந்தன்றே
தென்றல் வருவ தெனத்திகைத்து—நின்றயர்கான்

௨௫௬. மன்னற்கு மன்னன் வளவ னகளங்கன்
முன்னர்ப் பணில முழங்குதலுந்—தன்னிற்போய்ப்

௨௫௭. பேணுந் திருமடனு மென்றும் பிரியாத
நாணும் பெருவிருப்பா னல்கூரக்—காணுங்கா

௨௫௮. லேய்ப்ப வெதிர்வந் திரவி யுருவவொளி
வாய்ப்ப முகபங் கயமலர்ந்தாள்—போய்ப்பெருகு

௨௫௯. மீதா ரகலல்குல் வீழ்கின்ற மேகலையும்
போதாத வண்ணம் புடைபெயர்ந்தாள்—சோதி

---

௨௫௪. "தண்டுளை வாம்ப லறுகாலுந் தைவந்து"—எனவும் "தொண்டைக்கோன்" (தனிச்சீர்) எனவும்—பி. - ம்.

௨௫௮. "போய்ப்பெயர"—பி - ம்.

உ௬0. குழைய நடுவொடுக்குங் கொங்கையுந் தோளும்
பழைய படியே பணைத்தாள்—பிழையாத

உ௬௧. பொன்னித் துறைவன் பொலந்தார் பெறத்தகுவார்
தன்னிற் பிறரின்மை சாதித்தாள்—சென்னிக்குப்

உ௬௨. பாராண் முலையாலும் பங்கயத்தா டோளாலும்
வாரா விருப்பு வருவித்தா—ளோரணங்கு

## தெரிவை.

உ௬௩. கோது விரவாக் கொழும்பாகு கொய்தளிரின்
போது புலராப் பொலங்கொம்பு—மீது

உ௬௪. முயலா லழுங்கா முழுத்திங்கள் வானிற்
புயலா லழுங்காப் புதுமின்—னியல்கொண்

உ௬௫. டெழுதாத வோவ மெழுசிறைய வண்டு
கொழுதாத கற்பகத்தின் கோந்து—முழுது

உ௬௬. மிருளாக் கலாபத் திளந்தோகை யென்றுந்
தெருளாக் களியளிக்குந் தேறல்—பொருளால்

உ௬௭. வருந்தக் கிடையாத மாணிக்கம் யார்க்கு
மருந்தத் தெவிட்டா வமுதந்—திருந்திய

உ௬௮. சோலைப் பசுந்தென்ற றாது வரவந்த
மாலைப் பொழுதின்கண் மண்டபத்து—வேலை

உ௬௯. விரிந்த நிலாமுன்றில் வீழ்மகரப் பேழ்வாய்
சொரிந்த பனிக்கற்றை தூங்கப்—பரிந்துழையோர்

உ௭0. பூசிய சாந்தங் கமழப் பொறிவண்டு
மூசிய மௌவன் முறுகுயிர்ப்பத்—தேசிகப்

உ௭௧. பேரிசை யாழ்ப்பாணன் பேதை விறலியொடுஞ்
சேர வினிதிருந்த செவ்விக்கண்—ணேரியுங்

உ௭௨. கோழியும் வேங்கையு முப்பணையுங் கோரமும்
பாழி யயிரா பதப்பகடு—மாழியான்

உ௭௩. சூடிய வாரமு மாலையுஞ் சோணாடுங்
காடு திரைத்தெறியுங் காவிரியும்—பாடுகெனக்

---

உ௬0. "நடுவொதுங்கக்"—பி - ம்.
உ௭௩. "காடுதிரைத்திரைக்கும்"— பி - ம்.

உஎச. கூனை யியாழெடுத்தான் பாணன் கொதித்தெழுந்து
வேனை லரசனுந்தன் வில்லெடுத்தான்—றேனிமிர்

உஎரு. தந்திரி யாழ்ப்பாணன் றைவந்தான் றைவந்தான்
வெந்திறன் மாரனுந்தன் வில்லினாண்—முந்த

உஎசு. நிறைநரம்பு பண்ணி நிலைதெரிந்தான் பாணன்
றிறன்மதனு மம்பு தெரிந்தான்—விறலியொடும்

உஎஎ. பாண னொருபாணி கோத்தான் பலகோத்தான்
றாணி தொலையச் சுளிந்துவேள்—மாண

உஎஅ. விசைத்தன பாண னியாழ்ப்பாணி யெய்து
விசைத்தன வேனிலான் பாணி—விசைத்தெழுந்த

உஎகூ. வீணை யிசையாலோ வேனிலா னம்பாலோ
வாணுதல் வீழா மதிமயங்காச்—சேனுலாம்

உஅ0. வாடை யனைய மலையா நிலந்தனையுங்
கோடை யிதுவென்றே கூறினாள்—நீடிய

உஅக. வாரை முனிந்த வனமுலைமேல் விட்டபனி
நீரை யிதுவோ நெருப்பென்றா—ளூரெலாங்

உஅஉ. காக்குந் துடியை யழிக்குங் கணைமாரன்
தாக்கும் பறையென்றே சாற்றினாள்—சேக்கைதொறும்

உஅ௩. வாழு முலகத் தெவரு மனங்களிப்ப
வீழு நிலவை வெயிலென்றாள்—கோழிக்கோ

உஅச. னெங்கோ னகளங்க னேழுலகுங் காக்கின்ற
செங்கோல் கொடுங்கோல் சிலர்க்கென்றாள்—கங்குல்

உஅரு. புலருந் தனையும் புலம்பினா ளாங்குப்
பலரும் பணிந்து பரவக்—குலகிரிசூ

உஅசு. ழாழிப் புவன முடைய வுடையபிரான்
சூழிக் கடாயானை தோன்றுதலும்—யாழி

உஅஎ. னிழைக்கு மிசைமுதலா வெப்பகைக்கு மாற்றா
துழைக்கு முயிர்தழைப்ப வோடிப்—பிழைத்தனளாய்

உஅஅ. ழட்டுந் திகிரி கிரியின் முதுமுதுகிற்
கட்டுங் கடவுட் கடாயானை—யெட்டுந்

---

உஎரு. "தடவத்தான் றைவந்தான்"—பி - ம்.

௨௮௯. தரிக்கு முலகந் தனிதரித்த கோனைப்
பரிக்கு மயிரா பதமே—செருக்கிப்

௨௯0. பொருந்த நினையாத போர்க்கலிங்க ரோடி
யிருந்த வடவரைக ளெல்லாந்—திருந்தா

௨௯௧. விதையம் பொருதழித்த விந்தமே போலப்
புதைய நடந்த பொருப்பே—சிதையாத்

௨௯௨. திங்கட் குலத்திற்குந் தெய்வப் பொதியிற்கு
மங்கப் பழங்குமரி யாற்றிற்குந்—தங்கள்

௨௯௩. படிக்கும் பொருநிருப பன்னகங்கள் வீழ
விடிக்குந் தனியசனி யேறே—கடிப்பமைந்த

௨௯௪. யாம முரசா விழந்த நிறைநினது
தாம முரசு தரப்பெற்றே—னும

௨௯௫. விடைமணி யோசை விளைத்தசெவிப் புண்ணின்
புடைமணி யோசை புலர்ந்தேன்—தடைமுலைமே

௨௯௬. லாறா மலையக்கா லட்டகூடுன்செவியின்
மாறாப் பெருங்காற்றான் மாற்றினேன்—வேறாகக்

௨௯௭. கூசும் பணித்திவலை கொண்டுபோ மென்னுயிர்நீ
வீசு மதத்திவலை யான்மீட்டேன்—மூசிய

௨௯௮. காருலா மோதக் கடல்முழங்க வந்ததுயர்
நேரிலா நீமுழங்க நீங்கினேன்—பேரிரவி

௨௯௯. லென்மே லனங்கன் வரவந்த வின்னலெல்லா
நின்மே லனகன்வர நீங்கினே—னின்னுங

௩00. கடைபோக வென்னுயிரைக் காத்தியேல் வண்டு
புடைபோகப் போதும் பொருப்பே—விடைபோய்நீ

௩0௧. ராட்டுந் தடங்கலக்கின் மாரற் கயில்வாளி
காட்டுந் தடமே கலக்குவாய்—கேட்டருளாய்

௩0௨. கார்நாணு நின்கடத்து வண்டொழியக் காமனார்
போர்நாணின் வண்டே புடைத்துதிர்ப்பாய்—பார்நாதன்

௩0௩. செங்கைக் கரும்பொழியத் தின்கைக் கனங்கனார்
வெங்கைக் கரும்பே விரும்புவா—யெங்கட்

---

௨௯௪. (தனிச்சீர்.) "வம"—பி - ம்.

௱0௪. குயிரா யுடலா யுணர்வாகி யுள்ளா
யயிரா பதமேநீ யன்றே—பெயராது

௱0௫. நிற்கண்டா யென்றிரந்து நின்று ஞுதலாக [கோன்
விற்கொண்ட பேரிளம்பெண் வேறொருத்தி—கொற்கையர்

## பேரிளம்பெண்.

௱0௬. மல்லற் புயத்தான்றன் மால்யானைக் கைபோலக்
கொல்லத் திரண்ட குறங்கினா—ளெல்லையில்

௱0௭. கோடுங் கொலைகுயின்ற சேடன் குருமணிவேய்ந்
தாடும் படமனைய வல்குலாள்—சேடியாய்த்

௱0௮. தம்மை யெடுக்கு மிடைகடிந்த தம்பழிக்குக்
கொம்மை முகஞ்சாய்த்த கொங்கையாள்—செம்மை

௱0௯. நிறையு மழகா ணிகரழித்துச் செய்யா
ளுறையு மலர்பறிப்பா ளொப்பாள்— நறைகமழு

௱௧0. மாலை பலபுனைந்து மான்மதச்செஞ் சாந்தெழுதி
வேலை தருமுத்த மீதணிந்து—சோலையில்

௱௧௧. மானு மயிலு மனைய மடந்தையருந்
தானு மழகு தரவிருப்பத்—தேனிமி

௱௧௨. ரூற விளம்பாளை யுச்சிப் படுகடுந்
தேறல் வழிந்திழிந்த செவ்விக்கண்—வேறாக

௱௧௩. வாக்கி மடனிறைத்து வண்டு மதுநுரையும்
போக்கி யொருத்தி புகழ்ந்துதர—நோக்கி

௱௧௪. வருந்திச் சிறுதுள்ளி வள்ளுகிரா லெற்றி
யருந்தித் தமர்மே லயர்ந்தாள்—பொருந்து

௱௧௫. மயக்கத்து வந்து மனநுங்க நுங்க
னயக்கத் திருக்கனவு நல்கு—முயக்கத்து

௱௧௬. மிக்க விழைவு மிகுகளிப்பு மத்துயிலு
மொக்க விகல வுடனெழுந்து—பக்கத்து

௱௧௭. வந்து சுடரு மொருபளிக்கு வார்சுவரிற்
றந்த தனதுநிழ றானோக்கிப்—பைந்துகிற்

௱௧௮. காசுசூ ழல்குற் கலையே கலையாகத்
தூசு புடைபெயர்ந்து தோணெகிழ்ந்து—வாசஞ்சேர்

௩௧௯. சூடிய மாலை பரிந்து துணைமுலைமே
லாடிய சாந்தி னணிசிதைந்து—கூடிய

௩௨௦. செவ்வாய் விளர்ப்பக் கருங்கண் சிவப்பூர
வெவ்வா ணுதலும் வெயரரும்ப—விவ்வாறு

௩௨௧. கண்டு மகிழ்ந்த கனவை நனவாகக்
கொண்டு பலர்க்குங் குலாவுதலும்—வண்டுசூழ்

௩௨௨. வேரிக் கமழ்கோதை வேறாகத் தன்மனத்திற்
பூரித்த மெய்யுவகை பொய்யாகப்—பாரித்த

௩௨௩. தாமக் கவிகை நிழற்றச் சயதுங்க
ஞமக் கடாக்களிற்று நண்ணுதலுந்—தேமொழியுங்

௩௨௪. கண்டது கெட்டேன் கனவை நனவாகக்
கொண்டது மம்மதுச்செய் கோலமே—பண்டுலகிற்

௩௨௫. செய்த தவஞ்சிறிது மில்லாத தீவினையேற்
கெய்த வருமோ யிவனென்று—கைதொழுது

௩௨௬. தேறி யொருகாலுந் தேறாப் பெருமைய
லேறி யிரண்டா வதுமயங்கி—மாறிலாத்

௩௨௭. தோழியர் தோண்மே லயர்ந்தாளத் தோழியரு
மேழுயர் யானை யெதிரோடி—யாழியாய்

௩௨௮. மாடப் புகாருக்கும் வஞ்சிக்குங் காஞ்சிக்குங்
கூடற்குங் கோழிக்குங் கோமானே—பாடலர்

௩௨௯. சாருந் திகிரி தனியுருட்டி யோரேழு
பாரும் புரக்கும் பகலவனே—சோர்வின்றிக்

௩௩௦. காத்துக் குடையொன்றா லெட்டுத் திசைகவித்த
வேத்துக் குலகிரியின் மேருவே—போர்த்தொழிலா

௩௩௧. லேனைக் கலிங்கங்க ளேழனையு போய்க்கொண்ட
தானைத் தியாக சமுத்திரமே—மானப்போ

௩௩௨. ரிப்ப ரெழுபொழில் வட்டத் திகல்வேந்தர்
செம்பொன் மவுலிச் சிகாமணியே—கம்பநின்

௩௩௩. பாரிற் படுவன பன்மணியு நின்கட
னீரிற் படுவன நித்திலமு—நேரியநின்

௩௩௪. வெற்பில் வயிரமும் வேந்தநின் சோணாட்டுப்
பொற்பின் மலிவன பூந்துகிலு—நிற்பணியக்

௩௩௫. தொண்டா யிவடனது கொங்கைக் கொழுஞ்சுணங்குந்
தண்டா மரையின் றளிர்நிறமும்—பண்டத்

௩௩௬. துயிலுங் கவர்ந்ததுநின் றொல்குலத்து நீங்கள்
பயிலுந் திருநாற் படியே—புயல்வளவ

௩௩௭. மன்னிய தொண்டை வளநாடு வாளியும்
பொன்னி வளநாடு பூஞ்சிலையும்—கன்னித்

௩௩௮. திருநாடு தேருங் குறையறுப்பச் செய்தாற்
றருநாண் மடமகளிர் தம்மை—யொருநாளவ்

௩௩௯. வேனற் கரசன் விடுமே யவன்சினமிப்
பானற்க ணல்லா ருயிர்ப்பரமே—யானக்காற்

௩௪௦. குன்றே யெனத்தகுநின் கோபுரத்திற் றூங்குமணி
யொன்றே யுலகுக் கொழியுமே—யென்றிவை

௩௪௧. கூறி வணங்கிடு மிவ்வளவுங் கோதைமேற்
சீறி யனங்கன் சிலைவளைப்ப—மாறழியக்

௩௪௨. குத்துங் கடாக்களிற்றுப் போர்நான் கொடைச்சென்னி
யுத்துங்க துங்க னுலா.

கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலே—வைய
மளந்தா யகளங்கா வாலிலைமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளிம் மான்.

விக்கிரமசோழனுலா முற்றிற்று.



---

௩௩௫. "தண்டா நிறையும்"—பி - ம்.

௩௪௧. "செருப்பெய்ய"—பி - ம்.